# ஒருவர் மற்றொருவர்

மலையின் குறுகலான, கோணலான பாதையில் கட கடத்தபடி போய்க்கொண்டிருந்தது அந்தச் சிறிய பேருந்து. சமதளப் பகுதியிலிருந்து மலைமேல் கொண்டு வரப்படும் காய்கறி மூட்டை கள் வண்டி முழுவதும். முட்டைக்கோஸும், கொத்தமல்லியும், சுரைக்காயும், தக்காளியும், காரட்டும், வெங்காயமும், இஞ்சியும் கலந்த ஒரு மணம் வீசியது வண்டியில். இன்னும் கொஞ்சம் போனால் சூரிய அஸ்தமன நேரம். வண்டிக்குள் பரவிய மங்கலான, சிவப்புக் கலந்த ஒளியில் வண்டிக்குள் இருந்த நபர்கள் காய்கறி மூட்டைகளுடன் கலந்து தெரிந்தார்கள். சிவப்புத் தக்காளி வெளியே தெரிந்த மூட்டையின் பின்னால் வெள்ளை வெளேரென்ற முகமும் செம்பட்டைத் தலையுமாய் ஒரு குழந்தை உறங்கிக் கொண்டிருந்தது. வெள்ளை முண்டாசுடன் வெங்காயப் பையை நெஞ்சுவரை உயர்த்தி அணைத்தபடி ஓர் உருவம். கடும் பச்சை முக்காட்டுடன், பச்சை, சிவப்பு, மஞ்சள் வளையல்களணிந்த கையைச் சுரைக்காய் மூட்டை மேல் வைத்தபடி ஒரு பெண். யாரோ ஒருவர் வெகு சிரத்தை யுடன் வரைந்த ஓவியங்கள் போல் அந்த வண்டியிலுள்ளவர்கள் தெரிந்தார்கள்.

மேத்யூ நாதனின் ஓவியங்களில் இவர்களில் எத்தனை பேர்கள் வண்ணக் கீற்றுக்களாகவும், மிதக்கும் கண்களாகவும், விரிக்கப்பட்ட முக்காடாகவும், எழிற் பூச்சு எதுவுமில்லாத வெறும் நிர்வாண உருவங்களாகவும் இருந்தனர் என்று அவர்களைப் பார்த்தபடி நினைத்தார் அருளன். அவர் பக்கத்தில் சுருக்கங்கள் ஏறிய அவர் கையைப் பற்றியபடி அமர்ந்திருந்த சிறுவன் வீரு, அவர் எண்ண ஓட்டங்களை உணர்ந்தவன்போல் அண்ணாந்து அவரைப் பார்த்தான். அவர் நீண்ட வெண்தாடி அவன் நெற்றியில் பட்டது. சணல் கயிற்றினால் கட்டப்பட்ட, முற்றிலும் நரைத்த அவர் முடிமேல் வீருவின் கண்கள் ஓடின. சாதாரணமாக அவர் வெண்முடி தோளில் புரண்டுகொண்டிருக்கும். காற்றில் அலைந்தபடி. ஆனால் அன்று ஒரு விசேஷ தினம். புரளும் முடி சணல் கயிற்றினால் கட்டப்படும் தினம். மேத்யூ நாதனின் உடல், வான் நோக்கி எழுந்த தேவதாரு

மரம் ஒன்றின் கீழ் புதைக்கப்பட்ட தினம். அண்ணாந்து பார்த்த வீருவைப் பார்த்து மெலிதாகப் புன்னகைத்தார். வீரு அவர் மேல் மேலும் ஒண்டிக்கொண்டு அமர்ந்தான்.

வீரு அங்குள்ள உருளைக்கிழங்குப் பண்ணை ஒன்றில் வேலை செய்பவன். மற்ற நேரம் இவர்கள் இருவரின் பிள்ளையாய், உற்ற உறவாய் இவர்கள் வீட்டில் வளைய வருபவன். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் கீழே போய் ஓவியம் தீட்டுவதற்கான வண்ணக் குழாய்கள் வாங்கி வருவது போல் அன்றும் சென்றனர் இருவரும். நாதன் இல்லாவிட்டாலும் அந்த வெள்ளிக் கிழமைச் சடங்கைச் செய்தனர் இருவரும். அத்துடன் வீரு ஓவியம் பழக இரு சிறு ஓவியக் கித்தான் களும், காகிதங்களும். வீருவின் மடியில் அவை பத்திரமாக அமர்ந் திருந்தன.

இப்படி ஒரு பேருந்தில் அமர்ந்துதான் நாதனும் அவரும் இந்த மலைக் கிராமத்தில் குடிபுக வந்தனர் நாற்பது ஆண்டுகளுக்கு முன். அதற்கு ஒரு வாரம் முன்புதான் ஒரு பார்ட்டியில் அவர்கள் சந்தித்திருந்தனர். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் சிப்பாயாக இருந்த அருளனின் தந்தை இந்த மலையின் மடியில் குடிபுகுந்தார். எப்போதாவது காலை வேளையில் மலைகளைப் பார்த்தபடி “வடக்கில் இமயமலை பாப்பா - தெற்கில் வாழும் குமரி முனை பாப்பா” என்று, கர்ஜிப்பதுபோல் அவர் பாடியது கனவுபோல் நினைவிருந்தது. குமரி முனை எனும்போது குரல் கொக்கியில் சிக்கிக்கொண்டதுபோல் பிசிறடிக்கும். அவர் ஊருக்கும் அவருக்கும் உள்ள உறவு பற்றி அருளனுக்கு அவ்வளவுதான் தெரியும். பெற்றோர் காலத்துக்குப் பிறகு அருளன் எழுத்திலும் இசையிலும் ஈடுபட்டபடி மலையின் கீழ் உள்ள அந்த நகரத்தில் பல ஆண்டுகளாக வாழ்ந்தார். வெயில் காலத்தில் மலைப் பகுதிகளில் இளைப்பாற வரும் பலர் அவருக்கு நண்பர்கள். அப்படி வருபவர்கள் தந்த ஒரு பார்ட்டிதான் அது. மேத்யூ நாதன் பெண்களும் ஆண்களும் சூழ அமர்ந்தபடி சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார். இந்தியத் தந்தையும் வெளிநாட்டுத் தாயும் உருவாக்கிய ஓவியன் என்று அவரைப் பற்றிச் சமீபத்தில்தான் பத்திரிகையில் வந்திருந்தது. “உங்கள் வேர்களைத் தேடி வந்திருக்கி றீர்களா?” என்று பத்திரிகை நிருபர் கேட்ட கேள்விக்கு, “குறிப்பிட்ட வேர்களைத்தான் நான் தேடுகிறேன் என்பது என் தேடலைக் குறுக்கிவிடும். என் போன்றவர்களின் வேர்கள் உலகெங்கும் உள்ளது. விமானம் மாறுவதற்குமுன் பலமணி நேரங்களைச் செலவிட்ட விமான நிலையங்கள் எல்லாம் எங்களுக்குச் சத்திரங்கள். என் தந்தை இந்தியாவை விட்டு வெளிநாடு சென்றது இருபதாம் நூற்றாண் டின் ஆரம்ப ஆண்டுகளில். முதலாவது உலக யுத்தத்திற்குப் பிறகு. அப்போது அவர் தன் புதுச்சேரி வீட்டுத் தோட்டத்திலிருந்து இரண்டு கைப்பிடி மண்ணை ஒரு பொட்டலம் கட்டிக்கொண்டு போனாராம். அவர் பாரீஸ் போய் சேர்ந்ததும் ஒரு சிறு தொட்டியில் அதைப் போட்டு ஒரு செடியை நட்டாராம். இந்த உலகில் அவர்

தங்கிய இடங்களிலெல்லாம் அந்தத் தொட்டி மண்ணின் இரண்டு கைப்பிடி உண்டு. வேறு எத்தனையோ மண் அதில் கலந்துவிட்டாலும் அதில் தன் நாட்டு மண் இருப்பதாக அவர் நம்பினார். அந்த மண்ணில் நட்ட செடியின் வேர்கள் பாரீஸில், ஆழமாக, உறுதியாக என் வீட்டுத் தோட்டத்தில் உள்ளன. என் தேடல் வேர்கள் சம்பந்தப்பட்டது அல்ல" என்று சொல்லியிருந்தார். வேர்களைத் தேடுவது என்பது ஓர் உணர்ச்சிபூர்வத் தேவையாக உணரப்படாத காலம் அது. அலெக்ஸ் ஹேலி ஆப்பிரிக்க வேர்களைப் பற்றி எழுத இன்னும் பல ஆண்டுகள் இருந்தன. இன்னமும் தனி நபர்கள் உடை படாத, பின்னமாகிவிடாத, முற்றிலும் சிதைபடாத காலகட்டம். இரண்டாம் உலகப் போரின் கொடூரங்களினின்று உயிர்த்தெழுந்து, உலகெங்கும் வேர்களைப் பதிக்க யூதர்கள் முயன்றுகொண்டிருந்த இரண்டாவது தசாப்தம். கொள்கைகளுக்காகவும், மனிதத்துவத்துக் காகவும் சொந்த நாட்டையே துறக்க முயன்ற பலர் உருவாகி வந்த நேரம். பூகோள வரைபடங்களால் குறுக்கப்படாமல் உலகப் பிரஜைகளாக வாழ்வது சாத்தியம் என்று சிலர் நம்பின நாட்கள். அதனால் வேர்கள் பற்றி மேத்யூ நாதன் கூறியது யாரையும் உறுத்தவில்லை. அடுத்து அவர் கூறியது அறிவுஜீவிகள் வட்டத்தில் சில அதிர்ச்சி அலைகளை எழுப்பியிருந்தது.

“ஒரு வேளை நீங்கள் ஒரு துணைவியைத் தேடி வந்திருக்கிறீர்களோ இந்தியாவுக்கு?" என்று நிருபர் கேட்டதும்,

“இல்லை. துணைவியைத் தேடி இல்லை. பெண்களிடம் எனக்கு நாட்டமில்லை" என்று சாதாரணமாகச் சொல்லியிருந்தார்.

அந்தப் பார்ட்டிக்கு அவர் அழைக்கப்பட்டது கூட ஓர் அபூர்வ ஜந்துபோல் அவரைப் பார்க்கத்தான் என்று அருளன் கணித்திருந்தார். அது வெளிப்படையாக விவாதிக்கப்படாத ஒன்று. இத்தகைய எண்ணங்கள் கொண்டவர்கள் அப்போது பொந்துக்குள் ஆந்தைகள். பார்ட்டியில் அன்று உரையாடல் பலவகைகளில் நீண்டு இறப்பு பற்றிய கருத்துக்களில் வந்து நின்றது. திடீர்ச் சாவு, நோய்ச் சாவு, விபத்துச் சாவு என்று பலதும் பேசப்பட்டது.

“நான் தனியாகச் சாக விரும்பவில்லை. என் அருகில் யாராவது இருக்க வேண்டும்" என்றார் மேத்யூ நாதன்.

“அருகில் யார் இருந்தாலும் சாவது நீங்கள் மட்டுமாகத்தான் இருக்க முடியும்" என்றார் அருளன்.

உட்கார்ந்தபடியே பக்கவாட்டில் நின்றிருந்த அருளனை அண்ணாந்து பார்த்தார் மேத்யூ நாதன். மெத்தென்ற பார்வையுடைய நீலக் கண்கள்.

“நீங்கள் எப்படிச் சாக விரும்புகிறீர்கள்?" என்றார்.

“ஒரு பறவையைப் போல. கவனிப்பாரின்றி. பேணுகையின்றி. திடீரென்று. திட்டமேதும் இன்றி. நினைப்பாரின்றி."

"அப்படியா பறவைகள் சாகின்றன?"

"அப்படித்தான் இருக்க வேண்டும். வேறு எப்படி என்று தெரிய வில்லை".

பார்ட்டி முடிந்ததும் அருளன், மேத்யூவைத் தன் வீட்டுக்கு அழைத்தார். ஓவியம்பற்றியும், கவிதைபற்றியும் பேச்சுத் தொடர்ந்தது. மேத்யூவின் நீலக் கண்கள், மெல்லிய நீண்ட விரல்கள், மென்மையான முகம் இவற்றில் அருளன் அமிழ்ந்துபோனார். அருளனின் கருமை நிறமும், கூரிய கண்களும், சுருண்ட நீள் முடியும் தன்னைப் பிணைத் துப் போட்டதாக நாதன் பின்னர் பலமுறை கூறினார். வெகு விரைவில் இணைந்து வாழ முடிவெடுத்தனர். கரடு முரடான மலைப் பாதைகளில் பல மைல்கள் பேருந்தில் சென்று, நடந்து, மோட்டார் பைக்கில் கடந்து, அவர்கள் வாழ ஒரு சிறு மலைக் கிராமத்தைத் தேர்ந்தெடுத்தனர். அது அவர்கள் 'ஒளிந்து வாழும் இடம்' என்று சிலர் இடக்காக விமர்சித்தாலும் நாதன் அதைப் பொருட்படுத்த வில்லை. அருளனும். "இது எங்கள் கூடு" என்பார் நாதன் நண்பர்களிடம்.

ஓவியம் தீட்டியபடி, எழுதியபடி, மலைப் பிரதேச மரங்கள் வெட்டப்படுவதை எதிர்த்து இயக்கத்தை நடத்தியபடி, வீரு போன்ற சிறுவர், சிறுமியருக்கு ஓவியம், எழுத்து பயிற்றுவித்தபடி, கழிந்த ஆண்டுகள் எத்தனை என்று கணக்கெடுப்பதற்குள், மேத்யூ நோய் வாய்ப்பட்டார்.

அந்தக் கடைசி மாத ஓவியங்கள் மிகவும் மாறுபட்டவை. சுவரில் மாட்டினால் பஞ்சுபோல் பறந்து போய்விடும் என்று தோன்றும்படி அவை அமைந்திருந்தன. "பாரம் இல்லை. பாரம் தேவையில்லை" என்று ஒரு முறை மேத்யூ அவற்றைப் பார்த்துக் கூறினார். அதன்பின் வீருவை வரைந்தார். தினம் மாலை வீரு வந்து ஓவியம் தீட்ட அவரெதிரே அவர் விரும்பியபடி நின்றான். ஓவியத்தில் வீரு பக்கவாட்டில் படுத்திருந்தான். நிர்வாணமாய். சிரித்தபடி. வெள்ளைச் சிரிப்பு. அவன் உடல் தளர் நிலையில் எந்தவித இறுக்கமும் இல்லா மல் தோன்றியது. அவன் ஆணுறுப்பு ஒரு இளம் மொட்டு சாய்ந்தி ருப்பது போல் ஓய்வு நிலையில் இருந்தது. ஒரு கந்தர்வனைப் போல் தரையிலிருந்து எழும்பி மேலே போகக்கூடிய கனமற்ற தன்மை அந்த உடலில் இருப்பதுபோல் பட்டது.

படுக்கையிலேயே மேத்யூ நாதன் கிடந்த நாட்கள் வெகு சிலவே தான். அவர் உடலை நிதம் துடைத்தது ஒரு பழகிய கவிதை போல் நினைவில் இருந்தது.

ஐரோப்பிய ரத்தம் கலந்ததால் சுருக்கங்கள் அதிகமாக ஏறிய வெளுத்த உடல். பச்சை நரம்புகள் புடைத்த மெலிந்த கைகள். பறவைக் குஞ்சின் மெலிந்த கழுத்துபோல் சதைப் பற்றற்ற கழுத்து. எலும்பு துருத்திய கன்னங்கள். நீல நிறக் கண்கள். தென்னை

இலையின் உலர் சருகுபோல் ஈரம் போன உதடுகள். மேடிட்ட நெற்றியின் முடிவில் முற்றிலும் நரைத்த, இளமையின் தங்க நிறச் சாயைகளுடன் முதுகுவரை வந்த மென்கூந்தல். ரோமமற்றக் குறுகிய மார்பு. எப்போதுமே தளர்ந்த ஆடைகள் அணிந்ததால் எந்தவித வரிகளின் வடுக்களும் இல்லாத இடை. வற்றிய நீர்வீழ்ச்சிபோல் இறங்கிய தொடைகளும், கால்களும். வாடி, உலர்ந்துபோன பழம் போல் லேசாகக் கிடந்த மென்சிவப்பு ஆணுறுப்பு. ஒரு முறை, வெந்நீரில் துணியை நனைத்து ஒவ்வொரு அங்கமாய் உடம்பைத் துடைத்தபோது, மேத்யூ அவர் கைகளைப் பற்றி, "அருள், சாவு மிகவும் வினோதமானது இல்லையா?" என்று விட்டு அவர் அகங்கை யைத் தன் உலர்ந்த உதடுகளில் வைத்துக்கொண்டார். "அருள், என்னை மன்னித்துவிடு. இதை நான் தனியாகச் செய்ய வேண்டி யிருக்கிறது" என்றார்.

கண்களில் நீர் நிரம்ப, அருளன் அவரைத் தட்டித்தந்தார். இரவு தூக்கத்திலிருந்து திடீரென்று விழிப்பு வந்தபோது மேத்யூ அவரைப் பார்த்தபடி அமர்ந்திருந்தார்.

"காலடியில் தரை மெல்ல நழுவுவது போல் ஒரு உணர்வு அது அருள். கித்தானின் மேல் முனை வரை வண்ணக் கீற்றை இழுத்து, கித்தானின் பக்கவாட்டில், அதன் சதுர முனைகளைத் தாண்டி, வண்ணத்தை ஒழுக விடுவது போல, அதன் போக்கில் வழிய விடுவது போல . . ." என்றார். தொடர்ந்து, "என்னை ஒரு தேவதாரு மரத்தின் கீழே புதைப்பாயா?" என்றார்.

"சரி மேத்யூ."

பிறகு வெகு நேரம் பேசாமல் மௌனமாக இருந்தனர்.

பேருந்து ஓடிக்கொண்டிருந்தது.

புலர்காலை நேர ஒளியைப் பூசிக்கொண்டிருக்கும் ஓவியத்தை நினைவூட்டுவது போல் மேத்யூ இறந்தார். கண்விழித்துப் பார்த்தபோது மேத்யூவின் வெண்முடி தலையணையில் பரவிக் கிடக்க, கண்கள் மூடி உறங்குபவர்போல் கிடந்தார். தலை சற்றே அதிகம் சாய்ந்தி ருந்தது. அதீத அமைதியில் இருந்தது முகம்.

அருளன் அருகில் போய் தளர்ந்த கைகளால் அவர் தலையைக் கோதி விட்டார்.

"ஸாஹேப், ஸாஹேப்" என்று பொங்கிப்பொங்கி மூச்சுமுட்ட அழுதான் வீரு.

ஓவியங்களையெல்லாம் ஓர் ஓவியக் காட்சியகத்துக்குப் பதினைந்து நாட்களுக்கு முன் அனுப்பியாகி விட்டது. வீருவை வரைந்த ஓவியம் மட்டும் பெரிதாக எதிரில். அவர்கள் இருவரின் கனவுபோல்.

வானைத் தொட்டுவிடுவதுபோல் உயர்ந்து நிற்கும், காற்றில் பறப்பதுபோல் விஷ் விஷ் என்ற ஒலியுடன் ஊசலாடும் கிளைகள் கொண்ட தேவதாரு மரத்தின் கீழ் வீரு குழி வெட்டினான். வெள் ளைத் துணி போர்த்திய உடல் அதில் இறக்கப்பட்டது. பின்னணியில் யாரோ பெண்கள் அழுதார்கள். உடலை இட்டு, மண்ணை மூடி, சமனப்படுத்தியதும், எங்கிருந்தோ ஒரு பெண் குழந்தை தவழ்ந்து வந்து அதில் புரண்டது.

சன்னல் வெளியே அஸ்தமனம்.

இமாலய மலைகளின் பனி முகடுகள் உலையில் இட்ட தகடுகள் போல ஒளிர்ந்தன. பள்ளத்தாக்கில் உள்ள வீடுகளின் புகைபோக்கிகளி லிருந்து புகை எழும்புவது ஒரு சாம்பல் வண்ணக் கீற்றுப் போல் தெரிந்தது.

பேருந்து சில பயணிகளை இறக்க நின்றது. அருளன் சட்டென்று எழுந்தார். அவர் திடீரென்று எழுந்ததால் சற்றே உலுக்கப்பட்ட வீருவும் எழுந்தான். அது அவர்கள் வழக்கமாக இறங்கும் இடமல்ல. அருளன் வண்டியை விட்டு இறங்கினார். வீருவும் இறங்கி கித்தான் களுடனும், வண்ணக் குழாய்களடங்கிய பையுடனும் அவரருகில் நின்றான். மலைப்பாதையின் விளிம்பில் நின்றபடி அருளன் மலை களைப் பார்த்தபடி நின்றார். வெளேரென்ற வேட்டியும், குர்தாவும் அணிந்திருந்தார். வெண்முடி மகுடம் போல் பிரகாசித்தது. வீருவின் தலையை ஒரு முறை தடவிவிட்டு, விளிம்பினின்றும் நழுவி விழ ஆரம்பித்தார். எதையோ பற்றிக்கொள்ள முயல்பவர் போல் இரு கரங்களையும் விரித்தார். வேட்டியும், குர்தாவும் காற்றில் அலைபோல் எழும்பின. அந்த அஸ்தமன வெளிச்சத்தில் ஒரு ராட்சத வெண் பறவை தன் இலக்கை நோக்கி நிதானமாகப் பறப்பதுபோல் அவர் மெல்லக் கீழ்நோக்கி விழுந்து கொண்டிருந்தார். பிறகு ஒரு பாறையில் மோதி விழுந்தார். வாயடைத்துப் போன வீரு, "ஸாஹேப்" என்று கூவ முற்பட்டபோது, அவர் வெள்ளை உடையில் சிவப்பு வண்ணம் முரட்டுத் தூரிகையால் நிதானமின்றித் தீட்டப்பட்டதுபோல் பரவியது.

'சதங்கை', ஜூலை - செப்டம்பர் 1997